மாற்றுவதற்கு அவர்களிடையே மன மாற்றம்தான் அவசியமே அல்லாமல் அந்த மாதிரி ஆத்திரம் ஊட்டும்படி பேசுவது, எக்ஸ்டெம்போராக, பல விதமாகப் பேசியதை பலருக்கு மனம் புண்படும்படி இருக்கிறது. இதில் எதிர் பார்த்த பலனுக்கு பதில் விரோதமான பலன் விளைவதால், அவதிப்படுவது அவர்களல்ல, இங்கு இருப்பவர்கள் தான். அந்த மாதிரி விளைவுகள் ஏற்படாமல் செய்யவேண்டியது இந்த அசாங்கத்திலுள்ளவர்களுடைய கடமை அல்லவா? அதைப் பற்றி அவர்கள் யோசிப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பேச்சினால் சிலருக்கு மனப்புண் ஏற்பட்டு விட்டதாகச் சொன்னார்கள். தீண்டாமையை அனுசரிப்பதால் தீண்டாமைக்கு உட்படுகிறவர்களுக்கு எவ்வளவு மனப்புண் ஏற்படும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் யோசித்திருந்தால் பேசியதைப் பற்றி அவ்வளவு ஆட்சேபித்திருக்க மாட்டார்கள் என்பது எனது கருத்து.

*Siruvani river water to Coimbatore*

*1081 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சிறுவாணி ஆற்றுத் தண்ணீரை கோயம்பத்தூருக்கு குடி தண்ணிருக்காக பயன்படுத்துவதைக் குறித்து இரண்டு மாநில முதலமைச்சர்களும் பேசி முடிவு கண்டார்களா? விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: Not yet, Sir. Does not arise.

SRI S. M. ANNAMALAI: ஸார், இது பல ஆண்டுகளாக உள்ள பிரச்னை. கேரள முதல் மந்திரி சிறுவாணித் தண்ணீரைக் கொடுக்க முடியாது என்று கூறியது சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா? அதன் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதைப் பற்றி அந்த ராஜ்ய முதல் மந்திரி பரிசிலனை செய்து, அவர்களைச் சந்திப்பதற்கு அதுபற்றி எழுதுவதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

*Hostel Day (Madras Engineering College)*

*1082 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையிலுள்ள பொறியியல் கல்லூரியின் விடுதி விழாக்கொண்டாட்டத்திற்கு விடுதியில் தங்காது கல்வி பயிலும் மாணவர்களிடமிருந்தும் நன்கொடை வசூலிக்கப்பட்டதா?

(இ) அப்படியானால், அதன் காரணமென்ன?

(உ) முறையான கணக்குகள் மாணவர்களுக்குக் காட்டப் படுகின்றதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) & (b) The Hostel Day is celebrated from out of subscriptions contributed by the hostel students at an agreed rate fixed by their representatives. Such of those day-scholars who wish to participate in the Hostel Day are allowed to do so on payment of the subscription.

(c) The amount is collected by the Hostel Office on behalf of the students and the accounts are audited by certified Auditors.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், இந்தக் கல்லூரி மாணவர்களின் விடுதி விழா கொண்டாடப்பட்டதிலே, விடுதியிலே இல்லாத மாணவர்கள் விரும்பிக் கொடுத்தால் வாங்குவது பற்றி ஆட்சேபணை இல்லை. ஆனால் இல்லாத மாணவர்களிடத்திலே பல வந்தமாக வசூல் செய்து ஒரு குழப்பமான நிலைமை ஏற்பட்டிருப் பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? ஆகவே இது போன்று பலவந்தமான முறையிலே வசூல் செய்யக்கூடாது என்கிற அளவுக்கு ஒரு உத்திரவு போட முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பலவந்தம் செய்யப் படவில்லை என்பது என்னுடைய விடை. திருப்பி அதையே சொல்வதால், அது இன்னொரு கேள்வியாகி விடாது.

SRI S. NAGARAJA MONIGAR: ஸார், அது கல்லூரி விடுதி விழாவாக இருந்தாலும், மற்ற மாணவர்களும் அதிலே பங்கெடுத் துக் கொண்டார்கள். அப்படியிருந்தால், அவர்களிடத்திலே பணம் வசூலிப்பதற்கு ஆட்சேபணை என்ன என்பதை கனம் அங்கத்தினர் அறிவாரா ?

DEPUTY SPEAKER: இந்தக் கேள்வியை அங்கத்தினரிடம் கேளுங்கள். How can the Hon. the Minister reply?

*Bridge across Coleroon*

*1083 Q.—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்வி களுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரியலூர் கும்பகோணம் சாலையில் நீலத்த நல்லூருக்கும் மதனத்தூருக்கும் நடுவில் கொள்ளிடம் நதிக்கு குறுக்கே பாலம் கட்ட உத்தேசம் உண்டா ?

(ஆ) அதற்கு ஆகும் செலவு என்ன ?

(இ) எப்போது வேலை ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN: (a) No, Sir.

(b) & (c) Do not arise.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: ஸார், அரிய லூருக்கும் கும்பகோணத்திற்கும் போகும் பஸ்கள் நீடாமங்கலம், மன்னார்குடியிலிருந்து வரும் பஸ்கள், வண்டிகள் எல்லாம் நீலத்த